Regd. No. 2975. ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் 233

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 6 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி *—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1968 மே ௴ கீலக ௵ வைகாசி ௴

# ஸங்கடத்தை மறைக்கும் ஸந்தோஷம்.

ஸ்ரீபெரும்பூதூரில் வித்வத் ஸார்வபௌமராக எழுந்தருளி யிருந்து பத்தெட்டு வருஷங்களுக்கு முன் திருநாடலங்கரித்த ஸ்ரீமதுபய வே. ஆஸூரி மஹா ஸ்வாமியின் மூத்த திருக்குமாரர் ஸ்ரீ.உ.வே. ஆஸூரி ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி பத்தெட்டு மாதங்களுக்கு முன்பு பரமபதித்தது பலருமறிந்தது. அது மிகவும் சோசநீயமான விஷயம். அவருடைய திருவுருவப்படத்தை வெளியிட்டு ஒருவாறு சோகம் தீரப்பெறலாமென்றிருந்தோம். மிகமுயன்றும் அது கிடைக்காமற் போயிற்று இப்போது அது கிடைக்கும் பாக்கியம் வாய்த்தது. பெரிய ஸ்வாமியினுடைய ஸ்ரீபாஷ்ய காலக்ஷேப கோஷ்டியில் அறுவருடன் ஒருவராக அந்வயித்திருந்ததிலிருந்து தனிப்பட எடுக்கப்பட்டது. இந்த ஸ்வாமி வியாகரண வேதாந்தங்களில் பாரங்கத ரென்பது ஒருபுறமிருக்க ஸகல க்ரந்தங்களிலும் அவகாஹன முள்ளவ ரென்பது ப்ரசம்ஸோக்தியன்று. இவரிடம் ஒரு நாழிகை வார்த்தை சொன்னல் அநேக சாஸ்த்ரார்த்தங்கள் தெரிந்து கொண்டோமாவோம் என்பதை ஸ்வாநுபவத்தினல் தெரிவிக்கிறேன். எதிலும் ஆழ்ந்த வ்யுத்பத்திக்குமேல் ராஸிக்யமோ அளவுகடந்தது. இவர்க்கு உடன்பிறந்தவர்களான இருவரும் வித்வான்களாயும் மேதாவிகளாயும் விளங்கி வருகிறுர்கள். வித்வத் புத்ரர்களுக்கு ஏற்பட்டிருந்த அபக்க்யாதி இவர்களால் மறைந்தொழிந்தது. .... .... .... .... (*)

# ஸ்ரீ ராமாநுஜன்—233



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: **ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.**

ஸம்புடம் **20** | கீலக௵ வைகாசி 1968 மேமீ வெளியீடு. | ஸஞ்சிகை **5**


## நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி—7.

**(புள்ளம்பூதங்குடிப் பாடல்.)**

**விரும்பினவை யெய்தும் வினையனைத்துந் தீரும்**
**அரும்பரம வீடு மடைவீர்—பெரும்பொறிகொள்**
**கள்ளம்பூ தங்குடிகொள் காயமுடை யீர்! அடிகள்**
**புள்ளம்பூ தங்குடியிற் போம்.**

| | |
|---|---|
| பெரும் பொறி கொள் | பெரிய யந்திரங்கள் போன்ற பஞ்சேந்திரியங்களைக் கொண்டதும் |
| கள்ளம் பூதம் குடி கொள் | கபடச் செயல்களும் பஞ்சபூதங்களும் பொருந்தப் பெற்றதுமான |
| காயம் உடையீர் | உடலைக் கொண்டிருக்கின்ற உலகத்தவர்களே!, (நீங்கள்) |
| அடிகள் புள்ளம் பூதங்குடியில் போம் | நமது ஸ்வாமி வாழ்கின்ற திருப்புள்ளம் பூதங்குடியில் சென்று சேருங்கள்; (அங்ஙனம் சேர்ந்தவளவில்) |
| விரும்பினவை எய்தும் | அபேக்ஷிதங்களெல்லாம் கைகூடும்; |
| வினை அனைத்தும் தீரும் | எல்லாக் கருமங்களும் தொலையும்; |
| அரும் பரம வீடும் அடைவீர் | அருமையான பரமபதத்தையும் அடையப் பெறுவீர். |

* * * உடலுக்கு—'பெரும்பொறிகொள்' என்றும் 'கள்ளம்பூதங் குடிகொள்' என்றும் இரு விசேஷணங்களிடப்பட்டன. துஷ்டமிருகங்களை அகப்படுத்தும் யந்திரத்திற்குப் பொறியென்று பெயர். அதுபோல இந்திரியங்கள் ஆத்மாவை அகப்படுத்துதல்பற்றி அவை பொறியெனப்பட்டன. கீதையில் "இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:" எனப்பட்டதனால் அவற்றின் ப்ராபல்யத்தை நோக்கிப் பெரும்பொறியெனப்பட்டது. *மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவுமாகாசமுமாம் புண்ணாராக்கை* என்று திருமங்கையாழ்வாரருளியபடி இவ்வுடல் பஞ்சபூதங்களினால் அமைந்ததாதலால் **பூதங்கொள்காய**மென்றார். அது அநித்யமென்பதுபற்றிக் **கள்ள**மென விசேஷிக்கப்பட்டதென்னவுமாம். ❋

# அன்பர்களுக்கு அன்பார்ந்த அறிவிப்பு

[இது வைகாசி மாதத்துப் பத்திரிகையாகையாலே வைகாசி விசாகத் தெய்வமான நம்மாழ்வாருடைய பெருமையைச் சிறிது அனுபவிப்போம். நமது ஸ்ரீ ராமாநுஜன் எம்பெருமானார் திருநாமத்தைப்பூண்டு புகழ்பெறுவதனால் நேற்று முன்னாள் நடைபெற்று முடிவுபெற்ற நம்மிராமானுசன் மஹோத்ஸவத்திற்கு நினைவு மலராக எம்பெருமானார் ஸ்ரீஸூக்திப் பெருமைகளையும் அடுத்தபடியாக இதிலேயே அநுபவிப்போம்.]

## நம்மாழ்வார் வைபவம்.

"ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்போல சைவசமயத்திலும் சில தொண்டர்கள் பாடல்கள் பாடியுள்ளார்கள்; அவர்களுக்கும் அவர்கள் பாடிய பாடல்களுக்கும் என்ன ஏற்றமோ அந்த ஏற்றந்தான் ஆழ்வார்களுக்கும் அவர்களது பிரபந்தங்களுக்குமுள்ளது" என்று சிலரோ பலரோ லகுவாகச் சொல்லிவிடுகிறார்கள். சில ஸ்ரீ வைஷ்ணவர்களுங்கூட இங்ஙனே யெண்ணியிருப்பதுண்டு. இவ்வெண்ணம் மிகத் தவறானதென்பதை நன்கு நிரூபிக்கும்முகத்தால் நம்மாழ்வார் பிரபாவத்தை ஈண்டு அநுபவிக்கிறேன். தேவாரம் பாடின தொண்டர்களையோ அவர்களின் பாடல்களையோ அன்றுதொட்டு இன்றுவரையில் ஒரு வைதிகரும் (அந்தணரும்) பரிக்ரஹிக்கவில்லை. அத்தொண்டர்களைச் சதுர்த்தர்களென்று ஒதுக்கியே வைத்திருக்கிறார்கள். அவர்களுடைய பாடல்களில் வேதார்த்தமிருப்பதாகச் சொல்லுவாருமில்லை. வேதமோதினவர்களும் வேதப்பொருள் உணர்ந்தவர்களும் பரிக்ரஹித்தாலன்றோ அவற்றில் வேதார்த்தமிருப்பதாக நெஞ்சினால் நினைக்கவாவது முடியும். வேதபாஹ்யர்களே கைப்பற்றின அவற்றில் வேதார்த்த ஸத்பாவ வார்த்தைக்கும் ப்ரஸக்தியில்லையன்றோ.

இனி நம்மாழ்வாரையெடுத்துக்கொள்வோம். இவரையும் இவரது திவ்வியப் பிரபந்தங்களையும் இக்காலத்து வைதிகர்கள் பரிக்ரஹித்துள்ளார்களென்பது கிடக்கட்டும். பண்டைக்காலத்தில் எப்படிப்பட்ட வைதிகோத்தமர்கள் பரிக்ரஹித்தருளியிருக்கிறார்களென்பதைச் சிறிது பரிசீலனை செய்வோம். வேதாந்தவாசிரியர் குருபரம்பராஸாரத்தில் ஸ்ரீமந்நாதமுனிகளைப்பற்றி யருளிச்செய்யுமிடத்து "இவர்க்கு யோகதசையிலே ஸாக்ஷாத் க்ருதராய் நம்மாழ்வார் ஆசார்யரானார்" என்று கூறியிருக்கின்றார். *நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தமென்னப்படுகிற நம் தர்சனத்திற்கு ப்ரதமப்ரவர்த்தகரான ஸ்ரீமந்நாதமுனிகள் பரம வைதிகஸார்வபௌமர். அவர் நம்மாழ்வாரை ஸாக்ஷாத்கரிக்கவும் அவர் பக்கலில் திவ்யப்ரபந்தங்கள் பெறவும் எப்பாடுகள் பட்டாரென்பதுபற்றிச் சொல்லவேணுமோ? அவர்க்குப் பிறகு ஆளவந்தார், எம்பெருமானார், கூரத்தாழ்வான், பட்டர் ஆகிய நால்வரைமட்டும் இங்குக் கொள்ளுகிறேன். இவ்வாசிரியர்களின் திவ்யஸூக்திகளின் ஏகதேசமேகொண்டு இங்கு நம்மாழ்வார் ப்ரபாவத்தை விளக்குகிறேன்.

1. ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்னத்தில் *மாதாபிதா யுவதய:* என்னும் சுலோகத்தினால் ஆழ்வாரைத் துதித்திருக்கும்விதம் மிகவற்புதம். ஆழ்வாருடைய

திருநாமத்தை நேராகக் குறிப்பிடாமலே *ஆத்யஸ்ய ந: குலபதே:* என்ற சொற்றொடரை யிட்டு ஆழ்வாரைத் தம்முடைய குலக்கொழுந்தாகத் தெரிவித்தார். நம்முடைய குருபரம்பரை லக்ஷ்மீநாதஸமாரம்பமாகையாலே எம்பெருமானும் நம் குலகூடஸ்தனுகை யாலே *மாதாபிதேத்யாதி பூர்வார்த்தம் முழுவதும் "சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும், மேலாத் தாய்தந்தையும் அவரேயினியாவாரே" என்கிற திருவாய் மொழியின்படி அப்பெருமானிடத்திலும் பொருந்தக் குறையில்லாமையாலே இந்த ச்லோகம் எம்பெருமான் விஷயமேதானென்று சிலர் வாதிக்கவுங்கூடும். அவர்கள் வாயடங்க ஆளவந்தார் இங்குத் தாமுத்தேசித்த திருவடியிணைக்கு வகுளாபிராமமென்று விசேஷணமிட்டருளினர். எம்பெருமானுடைய திருவடி அவிரலதுலஸீதாமாபிராமமே யல்லது வகுளாபிராமமன்றே. "நாட்கமழ்மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன்" என்று ஆழ்வார் தாமே அருளிச்செய்துள்ளபடி மகிழமாலை ஆழ்வார்க்கேயன்றோ நிரூபகம். *வகுளாபரணம் வந்தே ஜகதாபரணம் முநிம்* என்றார்களே. "ஆத்யஸ்ய ந: குலபதே:" என்பதனால் *ஆசார்யாணுமஸாவஸாவித்யாபகவத்த:* *ஆபகவத்த: ப்ரதிதாம் அநகாம் ஆசார்யஸந்ததிம்* என்கிறபடியே எம்பெருமானையே விவக்ஷித்தாலும் குறையில்லை. எம்பெருமானுடைய வகுளாபிராமமான அங்க்ரியுகளம் சடகோபனென்றும் சடாரியென்றும் பகவத் பாதுகையென்றும் வ்யபதேசிக்கப்படுகிற ஆழ்வாரேயன்றே.

2. இனி ஸ்ரீ பாஷ்யகாரருடைய ஸ்ரீஸூக்தியைக்கொண்டு ஆழ்வார்பெருமையை நிரூபிக்கிறேன். இந்த நிரூபணம் அடியேனுடைய த்ரமிடோபநிஷத் ப்ரபாவஸர்வஸ்வத் திலே மிக விரிவாகவுள்ளது. இங்கு அதிஸம்க்ஷிப்தமாக விஜ்ஞாபிக்கிறேன். "அகில புவநஜந்மஸ்தேமபங்காதிலீலே" இத்யாதி ச்லோகம் எம்பெருமான் விஷயமாயிருப்பது போலவே ஆழ்வார் விஷயமாகவுமுள்ளது. ஸப்தம்யந்தங்களான ஐந்து விசேஷணங் களும் ஆழ்வாரிடத்திலும் மிகப் பொருந்துகின்றன. (**அகிலபுவநஜந்மஸ்தேம பங்காதிலீலே**) இரண்டுவிதமாக ஆழ்வார்க்குப் பொருந்துமிது. அகிலபுவநஜன்மஸ்தேம பங்கங்களுக்கு ஆதியானவன் எம்பெருமான்: தேந ஸஹ லீலா யஸ்ய தஸ்மிந். *மின்னிடைமடவார்கள் நின்னருள் சூடுவாரென்கிற திருவாய்மொழியில் *என்னுடைய பந்துங் கழலும் தந்து போகுநம்பீ* இத்யாதியாலே எம்பெருமானேடு லீலாரஸங் கொண்டாடினவர் என்றபடி. அன்றிக்கே, புவநஜந்மஸ்தேமபங்காதிலீல: அகிலம் யஸ்ய தஸ்மிந். புவநஸ்தேமபங்காதிலீலனை எம்பெருமானையே அகிலமுமாகக் கொண்டவர்; *உண்ணுஞ்சோறு பருகுநீர்த்தின்னும் வெற்றிலையும் **எல்லாங்கண்ணன்*** என்றிருந்தவ ராழ்வார். (**விநத விவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே**) விநத விவித பூதவ்ராதங்களை ரக்ஷிப்பது எம்பெருமானுடைய திருவடிகள். பாதுகாஸஹஸ்ரே ப்ரபாவபத்ததியில் (42) *ஜகதாம் அபிரக்ஷணே த்ரயாணும் அதிகாரம் மணிபாதுகே வஹந்த்யோ:, யுவயோ:* என்று ஸாதித்தபடி ரக்ஷகத்வம் பாதுகைக்கே; பாதுகையான ஆழ்வாருக்கேயென்றபடி. (**ச்ருதி சிரஸி விதீப்தே**) ச்ருதி சிரஸ்ஸாவது உபநிஷத்து; அதில் விசேஷேண தீப்தர் ஆழ்வார். *தத் விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாம்ஸஸ் ஸமிந்ததே* இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்கள் ஆழ்வாரையன்றே ஓதுகின்றன. (எங்ஙனேயென்னில்;) விப்ராஸ: என்றது விப்ரா: என்றபடி. ப்ராஹ்மணாஸ:, ஸோம்யாஸ: என்பவைபோன்ற ச்சாந்த ஸப்ரயோகம். "ந சூத்ரா பகவத்பக்தா **விப்ரா** பாகவதா: ஸ்ம்ருதா:" என்கிறபடியே

விப்ரத்வஸித்தி பெற்றவர் ஆழ்வார். [விபந்யவ:] பண-ஸ்துதௌ என்கிற தாதுவிலிருந்து நிஷ்பந்நமான சொல்லாகையினாலே விசேஷித்து ஸ்துதி செய்தவரென்றபடி. ''தேவிற்சிறந்த திருமாற்குத் தக்க தெய்வக்கவிஞன், பாவிற்சிறந்த திருவாய்மொழி பகர்பண்டிதனே'' என்று கம்பர் கூறியபடி எம்பெருமானுக்குத் தகுந்த ஸ்தோதா நம்மாழ்வார். [ஜாக்ர்வாம்ஸ:] *தொல்லை மாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதலே* (திருவிருத்தம்-97) என்று சொல்லி இந்நிலத்திலும் உறக்கமற்றிருந்தவர் நம்மாழ்வாரே. மேலெடுத்த உபநிஷத்வாக்யத்தில் 'இந்ததே' என்னாமல் 'ஸமிந்ததே' என்கையாலே (ஸம்) என்கிற உபஸர்க்கத்தை நோக்கியே ஸ்வாமி பாஷ்யகாரர் தீப்தே என்னாமல் (விதீப்தே) என்றது. *ச்ருதிசிரஸி விதீப்தே* என்பதற்கு மற்றொருவிதமான யோஜனையும் கேண்மின். ச்ருதியாவது த்ரமிடச்ருதியான திருவாய்மொழி; அதில் தீப்தர் ஆழ்வார்; (எங்ஙனேயென்னில்;) பதிகந்தோறும் நிகமனப் பாசுரத்திலே *குருகூர்ச் சடகோபனென்றும் *காரிமாறன் சடகோபனென்றும் விளங்குபவரென்கை. ச்ருதிசிரஸ்ஸாவது கண்ணிநுண்சிறுத்தாம்பு; திருவாய்மொழியின் முடிவிலே நியமேந அநுஸந்திக்கப்படுதலால் அது ச்ருதிசிரஸ்ஸா யிற்று. அதில் விதீப்தர்...விசேஷேண தீப்தர்; அந்த ப்ரபந்தம் முழுவதும் ஆழ்வார் விஷயமேயாதலால் அதில் விதீப்தரென்பது மிகப் பொருத்தம். (ப்ரஹ்மணி) ''ஸர்வத்ர ப்ருஹத்த்வ குணயோகேந ஹி ப்ரஹ்மசப்த:'' என்ற ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியின்படி ப்ரஹ்ம மென்றது மிகப்பெரிய வஸ்துவென்றபடி. ஆழ்வார் பெரிய திருவந்தாதியில் *புவியுமிரு விசும்பும் நின்னகத்த நீயென் செவியின் வழிபுகுந்தென்னுள்ளாய், அவிவின்றி யான் பெரியன், நீ பெரியை யென்பதனையாரறிவார்* என்கிற பாசுரத்தினால் மிகப் பெரியோனை எம்பெருமானையும் தம்முள் ஒரு மூலையிலடக்கியிருக்கையாகிற பெருமை தமக்கேயுள்ள தென்று ஸோபபத்திகமாக நிருபித்தருளியிருப்பதனால் ஆழ்வாரை ப்ரஹ்மமென்னத் தட்டில்லை. ஆழ்வார் தம்முடைய ப்ரஹ்மத்வத்தைத் தாமே உபபாதித்தருளியிருப்பது விசேஷம். அப்பாசுரத்தின்படி எம்பெருமான் ப்ரஹ்மமாகவும் ஆழ்வார் பரப்ரஹ்ம மாகவும் தேறுதலால் இங்கு 'பரஸ்மிந்ப்ரஹ்மணி' என்றது ஆழ்வார்க்கு மிகமிகப் பொருத்தம். [ஸ்ரீநிவாஸே] *ஸ து நாகவர: ஸ்ரீமாந்* அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்* லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:* இத்யாதி ஸ்தலங்களில் பகவத்கைங்கர்ய ருசியும் பகவத் பக்தியுமே ஸ்ரீயாகச் சொல்லப்படுகையாலே அந்த ஸ்ரீ ஆழ்வார் பக்கலிலே கஜேந்த்ர விபீஷண லக்ஷ்மணாதிகளிற்காட்டிலும் புஷ்கலமாகையாலே ஸ்ரீநிவாஸத்வமும் ஆழ்வார்க்கு அநபாயம். ஆக இவ்வண்ணமாக ஸ்ரீ பாஷ்யகாரர் ஆழ்வார் பக்கலிலே தம்முடைய ப்ராவண்யத்தைக் காட்டியருளினாராயிற்று.

3. இனி ஆழ்வார் திறத்திலே கூரத்தாழ்வானுடைய ஈடுபாடோ அபரிமிதம். ஆழ்வானுடைய பஞ்சஸ்தவம் முழுவதும் ஆழ்வாரருளிச் செயல்மயம். ஆயினும் முதல் ஸ்தவத்தில் இரண்டு சுலோகங்கள் போதும். ''த்ரைவித்யவ்ருத்தஜநமூர்த்த விபூஷணம் யத் ஸம்பச்ச ஸாத்விகஜநஸ்ய யதேவ நித்யம், யத்வா சரண்யமசரண்யஜநஸ்ய புண்யம் தத் ஸம்ச்ரயேம வகுளாபரணாங்க்ரியுக்மம்'' = ஸ்ரீவைகுண்ட ஸ்தவவியாக்யானத்திலே இதற்கு அடியேனுடைய விபுலவிவரணம் காண்க. இதற்கடுத்த சுலோகம்—*பக்திப்ரபாவ பவதத்புத பாவபந்த ஸந்துக்ஷித ப்ரணயஸார ரஸௌகபூர்ண:, வேதார்த்த ரத்நநிதிரச்யுத

திவ்யதாம ஜீயாத் பராங்குசபயோதிரஸீமபூமா* என்பது அந்யாத்ருசமான விந்யாஸம். இதற்கும் அடியேனுடைய விபுலவிவரணம் காணத்தக்கது. இதில் "**வேதார்த்தரத்நநிதி:**" என்றருளிச் செய்ததுதான் உயிரான வார்த்தை. *யதுக்தயஸ் த்ரயீகண்டே யாந்தி மங்கல ஸூத்ரதாம்* என்று வேதங்களுக்குத் தாலிகட்டின மஹாநுபாவரான ஆழ்வான் ஆழ்வாரை **வேதார்த்தரத்நநிதி:** என்றது ஸாமாந்யமன்றே. இந்தவொரு சுலோகத்தைக் கொண்டே நம்மாழ்வார் ப்ரபாவத்தைப் பலநாள் உபந்யஸிக்கலாம்.

**4.** இனி ஆழ்வார் திறத்திலே பட்டருடைய ஈடுபாட்டைப்பற்றிப் பேசப் புகுந்தாலோ *பன்னியுரைக்குங்காற் பாரதமாம்* என்கிற திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்தி யின்படியே அதுவொரு மஹாபாரதமாகும். நம்முடைய ஸம்பிரதாயத்தில் பட்டர் மற்றையாசாரியர்களைப் போலல்லர். இவருடைய திருநாவீறு மிகச் சிறந்தது. திவ்வியப் பிரபந்த வியாக்கியானங்களில் பலபலவிடங்களில் 'பட்டருடைய நிர்வாஹம்' என்று காணப்படுவது மிகமிக அதிசயிக்கத்தக்கதாயிருக்கும். இவரருளிச்செய்த பகவத் குணதர்ப்பணமென்கிற ஸஹஸ்ரநாமபாஷ்யம் ஒப்புயர்வற்று விளங்குவதற்குக் காரணம் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளையடியொற்றியே அர்த்தங்களை யருளிச்செய்ததுதான். நம்மாழ்வார்க்குத் துதியாக பட்டர் அருளிச்செய்துள்ள ச்லோகம் அத்விதீயம்; "ரிஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வமிவோதிதம், ஸஹஸ்ரசாகாம் யோத்ராக்ஷீத் த்ராவிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம்" என்பது. இதில் சடகோபரென்றோ வகுளாபரணரென்றோ பராங்குசரென்றோ திருநாமத்தைக் கூறாமல் **ரிஷி**யென்றே கூறினார். [ஸஹஸ்ரசாகாம் த்ராமிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம் அத்ராக்ஷீத்] என்றதும், ஆழ்வார்க்கு க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வமென்று பெயரிட்டதும் பட்டரொருவர்க்கே நிலமானதன்றோ.

ஆரியர்காள்! இப்போது அடியேன் ஆசிரியர்கள் நால்வருடைய ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு ஆழ்வார் வைபவத்தை மட்டும் சுருங்க உபபாதித்தேன். இதைக்காட்டிலும் அடியேன் முக்கியமாகக் கொண்டிருப்பது—இந்நால்வருடைய ஸ்ரீஸூக்திகளிலும் திவ்ய ப்ரபந்த திவ்யார்த்தங்கள் அமைந்திருக்குமழகை அநுபவிப்பதேயாம். ஆளவந்தாருடைய ஸ்தோத்ரரத்னமானது பெரும்பாலும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளின் அரும்பெரும் பொருள்களையே கொண்டு அவதரித்துள்ளதென்பது சிறிது ஊன்றிப்பார்த்தாலும் ஸ்பஷ்டமாக விளங்கும். சிலவிடங்களில் ஒரு பாசுரத்தைப் பூர்த்தியாக ஒரு ச்லோகமாக்கியருள்வர். சிலவிடங்களில் ஒரு பதிகத்தின் ஸாரமான பொருளை ஒரு ச்லோகத்தாலே யருளிச்செய்வர். சிலவிடங்களில் ஒரு பாசுரத்தின் பொருளை இரண்டு சுலோகங்களாலே விளக்கியருள்வர். இப்படி நாம் ப்ரதிஜ்ஞைமட்டும் பண்ணிவிடுவதன்றிக்கே ஸம்க்ஷேபமாகச் சிலவிடங்களை யெடுத்துக்காட்டவும் விரும்புகிறோம். விசேஷித்து எம்பெருமானாருடைய ஸ்ரீ பாஷ்யாதிகளிலுள்ள அருளிச்செயற் சுவைகளை **த்ரமிடோபநிஷத் ப்ரபாவஸர்வஸ்வ**மென்கிற நூலில் விரிவுக்கு அஞ்சாமல் விவரித்திருக்கிறேனாதலால் மற்றை மூவர் ஸ்ரீஸூக்தி ரஸங்களை மட்டும் இங்கு நிரூபிக்கிறேன். அதாவது திவ்யப்ரபந்தார்த்தங்களைக் கையாண்டிருப்பது.

ஸ்தோத்ரரத்நே –(ச்லோ. 12.) *க: ஸ்ரீ:ச்ரிய:* = "திருவுக்குந்திருவாகிய செல்வா" என்கிற திருமங்கையாழ்வாரருளிச்செயலை யுட்கொண்டு [ச்ரிய: ஸ்ரீ:] என்றார். மேல்

45 ஆம் ச்லோகத்தில் **"ச்ரிய: ச்ரியம்:"** என்றதுங் காண்க. (ச்லோ. 26.) ***நிராஸ கஸ்யாபி ந தாவதுத்ஸஹே***. இந்த சுலோகம் முழுவதும் *தருதுயரந்தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை, விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட்டம்மானே, அரிசினத்தாலீன்ற தாய் அகற்றிடினும், மற்றவள் தனருள் நினைந்தேயழுங் குழவியதுவே போன்றிருந்தேனே* என்கிற பெருமாள் திருமொழிப் (5—1.) பாசுரத்தின் கருத்தையே கொண்டது. அந்தப் பாசுரத்தின் மொழிபெயர்ப்பே இந்த ச்லோகம். (ச்லோ. 38 ***ஸ்வவைச்வரூப்யேண***) இதில் "குணைந ரூபேண விலாஸசேஷ்டிதைஸ் ஸதா தவைவோசிதயா தவ ச்ரியா" என்கிற உத்தரார்த்தமானது "உனக்கேற்குங் கோல மலர்ப்பாவைக்கன்பா" (10—10—6.) என்கிற திருவாய்மொழிப்பாசுரத்தைச் செவ்வனே விவரிப்பது. (ச்லோ. 40 ***நிவாஸசய்யாஸந.***) இது *சென்றால் குடையாமிருந்தால் சிங்காசனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள், என்றும் புணையாமணி விளக்காம் பூம்பட்டாம் புல்குமணையாம் திருமாற்கரவு* என்கிற பொய்கையார் பாசுரத்திற்கு ப்ரதிச்சந்தமாயமைந்தது.

(ச்லோ. 47. ***திகசுசிமவிநீதம்***.) திருவாய்மொழியில் (1—5.) *வளவேழுலகு பதிகத்தின் ப்ரமேயமே இந்தச்லோகமாக வடிவெடுத்தது. (ச்லோ. 52. 53. ***வபுராதிஷு, மமநாத.***) இவ்விரண்டு ச்லோகங்களும் "எனதாவிதந் தொழிந்தேன் இனி மீள்வ தென்பதுண்டே ......எனதாவியாரியானார் தந்த நீ கொண்டாக்கினையே" என்ற (2-3-4.) திருவாய்மொழிப் பாசுரத்தின் ப்ரதிச்சந்தமே. (ச்லோ. 56 ***ஸக்ருத்த்வதாகார***) அருளிச்செயல்களில் பலசந்தைகளையுட்கொண்டருளிச்செய்த ச்லோகமிது. *ஒருநாள் காணவாராயே* நம்மையொருகால் காட்டி நடந்தால் நாங்களுய்யோமே* எம்மாவீட்டுத் திறமும் செப்பம்* என்பன முதலான பல பாசுரங்களைக்கொண்டே யருளிச்செய்தது. இதில் **மஹாத்மபி:** என்றது ஆழ்வார்களையே. (ச்லோ. 57. *ந தேஹம் ந ப்ராணாந்.*) இந்த ச்லோகமும் திருவாய்மொழியில் *ஏறாளுமிறையோன் (4. 8.) பதிகமும் பர்யாயமே. அந்த பத்துப் பாசுரங்களை ஒரு ச்லோகமாக ஆக்கியிருக்கிறாரென்பது ஸுஸ்பஷ்டம். ஆக ஆளவந்தார் ஸ்ரீஸூக்திரஸங்களை விரிவுக்கு அஞ்சி ஸங்க்ரஹமாக நிகமித்துக் கொண்டோம்.* இனி ஆழ்வானுடைய ஸ்ரீஸூக்திரஸங்கள் காண்மின்.

(ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில்) ச்லோ. 7. [**ஆம்நாயமூர்த்தநிச மூர்த்தநி சோர்த்வ பும்ஸாம்.**] இதில், *திருமாலிருஞ் சோலைமலையே திருப்பாற்கடலே என்தலையே* என்றும், *என்னுச்சியுளானே* என்றும் ஆழ்வாரருளிச்செய்துள்ள திருவாய்மொழிப் பாசுரங்களை யடியொற்றி **"ஊர்த்வபும்ஸாம் மூர்த்தநி சகாஸ்தி"** என்றருளிச் செய்தார். ஆகவே நம்மாழ்வாரை ஊர்த்வபுருஷரென்றாராயிற்று. வரதராஜஸ்தவத்தில் *யச்ச மூர்த்தா சடாரே:* என்று ஸுவ்யக்தமாகவே யருளிச்செய்திருப்பது இங்குச் சேரவநுஸந்தேயம். (ச்லோ. 10) [ப்ரேமார்த்ர விஹ்வலகிர: புருஷா: புராணாஸ் த்வாம் துஷ்டுவுர் மதுரிபோ! மதுரைர் வசோபி:] *கேட்டு ஆரார்வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே* என்றும் *தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்* என்றும் *குழலின்மலியச் சொன்னவோராயிரமென்றும் தாங்களே சொல்லும்படியான மாதுர்யம் மலிந்த திவ்ய ஸூக்திகளாலே எம்பெருமானே! முன்னோர்கள் உன்னைத் துதித்தார்கள். அப்படி துதித்தவர்கள் யாரென்னில்; [ப்ரேமார்த்ர விஹ்வலகிர: புருஷா: புராணா:] *உள்ளொலா

முருகிக் குரல் தழுத் தொழிந்தேனுடம்பெலாம் கண்ணநீர் சோர* என்றும் *வேவாரா வேட்கை நோய் மெல்லாவியுள்ளுலர்த்த* என்றும் *ஆராவமுதே அடியேனுடலம் நின்பாலன்பாயே நீராயலைந்து கரைய வுருக்குகின்ற* என்றும் ஹார்தமான ப்ரேமத்தாலே நெஞ்சுகனிந்து குரல் தழதழத்துப் பேசுகின்ற ஆழ்வார்கள். (இதாநீம் அலம்விஸ்தரேண.)

அடுத்த அதிமாநுஷஸ்தவத்திற்குச் செல்வோம். இதில் மூன்றுவது ச்லோகம் ஆழ்வானுக்கு நம்மாழ்வாரிடத்திலுள்ள பக்தியே வடிவெடுத்தபடி யென்னவேணும். [ஸ்ரீமத் பராங்குசமுநீந்த்ரமநோநிவாஸாத் தஜ்ஜாநுராகரஸமஜ்ஜநமஞ்ஜஸாப்ய, அத்யாப்ய நாரத ததுத்தித ராகயோகம் ஸ்ரீரங்கராஜசரணம்புஜமுந்நயாம:] என்னுமந்த ச்லோகம் ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகளை வருணிப்பது. பாதங்களின் சிவப்பை வருணிக்கும் லௌகிக கவிகள் "ரக்தௌ தவாங்க்ரீ ம்ருதுலௌ புவி விக்ஷேபணாத் த்ருவம்" என்கிருர்கள். ஆழ்வானருளிச்செய்வது அப்படியா இருக்கும்? ஸ்ரீரங்கநாதனுடைய திருவடிகள் வெகுகாலம் நம்மாழ்வாருடைய திருவுள்ளத்திலுறைந்து அவ்விடத்திலுள்ள அநுராகரஸத்திலே ஊறிக்கிடந்தபடியாலே அந்த ராகயோகம் இன்னமும் மாருமலிருப்ப தாக அருளிச்செய்தவிது விலக்ஷணப்ரக்ரியை. நம்மாழ்வார்க்கு ஸ்ரீரங்கநாதன் திருவடி களிலே எவ்வளவு பக்தியோ அதிற்காட்டிலும் பதின்மடங்கு பெருத்தது ஆழ்வானுக்கு நம்மாழ்வாரிடத்திலுண்டான பக்தியென்று இந்தவொரு சுலோகத்திலுல் எளிதாக அறுதி யிடலாமன்றே. இவ்வதிமாநுஷஸ்தவத்தில் உத்தரபாகம் ஸ்ரீக்ருஷ்ணகுணநுபவம். அது முழுவதும் ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்திகளிலிருந்தே அற்புதமாக அமைந்ததென்பதை அடியேனுடைய வியாக்கியானங்கொண்டு உணரலாம்.

இனி ஸுந்தரபாஹுஸ்தவத்தை யெடுத்துக்கொண்டாலோ அதுவும் அருளிச் செயல் மயமே. ஸ்வல்பமாகவே இங்கு விஜ்ஞாபிக்கிறேன். ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் (9-1.) *மந்தரம் நாட்டியன்று மதுரக் கொழுஞ்சாறுகொண்ட சுந்தரத் தோளுடையான்* என்றருளிச்செய்ததை இந்த ஸ்தவத்தில் (ச்லோ. 4.) *உததிகமந்த ராத்ரிமதிமந்தலப்தபயோ மதுரரஸேந்திராஹ்வஸுத ஸுந்தரதோ:பரிகம்* என்று மொழிபெயர்த்தருளினுர். திருவாய்மொழியில் *மதிதவழ்குடுமி மாலிருஞ்சோலை* என்றதை (5.) *சசதரரிங்கணுட்யசிகம்* என்ருர். *அதிர்குரல்சங்கத்தழகர்தங்கோயில்* என்ற திருவாய்மொழிப்பாசுரத்தை (5.) "பிதுரிதஸப்தலோக ஸுவிச்ருங்கலசங்கரவம்" என்று மொழிபெயர்த்தார். பெரியாழ்வார் திருமொழியில் *கருவாரணம் தன்பிடி துறந்தோடக், கடல்வண்ணன் திருவாணைகூறத் திரியும் தண்மாலிருஞ் சோலையே* என்ற பாசுரத்தை (8.) "ஸுந்தரதோர்திவ்யாஜ்ஞா" என்ற ச்லோகத்திலுல் மொழிபெயர்த்தருளினுர். (ச்லோ. 12.) *வகுளதரஸரஸ்வதீவிஷக்த .... * என்கிற ச்லோகத்தில் அருளிச்செய்யுமது அற்புதம்; கிந்நரஸ்த்ரீகள் அழகரை ஸேவிக்கத் திருமாலிருஞ் சோலைமலைத் தாழ்வரை களிலே வந்து சேர்ந்து, நம்மாழ்வாருடைய திருவாய்மொழிப் பாசுரங்களை ஸுஸ்வர மாகவும் ரஸவத்தரமாகவும் ஸாபிப்ராயமாகவும் பாடுகிருர்களாம்; *மரங்களுமிரங்கும் வகை மணிவண்ணவோவென்று கூவுமால்* என்னும்படியான அருளிச்செயல்களை அப்படி பாடும்போது கல்லும் உருகாநின்றது; உருகின அதுதானே சிலம்பாறென்று பேரெடுத்துப் பெருகாநின்றதென்கிருர். அழகருக்கு *ஏறுதிருவுடையான்* என்று ஆண்டாள் சாத்தின

திருநாமத்தை (16, 17.) *ப்ராரூடச்ரியம்* என்றும் *ஆரூடஸ்ரீ:* என்றும் மொழி பெயர்த்தருளினர்.

திருவாய்மொழியில் *ஏழையராவிப்பதிகத்தில் பகவத்கேசபாசத்தின் வர்ணநம் "கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின் உட்கொண்ட நீலநன்னூல் தழைகொல்! அன்று மாயன்குழல்* என்றுள்ளது; அதை அப்படியே மொழிபெயர்க்கிறார் (40) "அந்தம் தமஸ் திமிரநிர்மிதமேவ யத் ஸ்யாத் தத்ஸாரஸாதிதஸூதந்து-அதிவ்ருத்தவார்த்தம்-ஈசஸ்ய அலகாளி ஜாலம்" என்று. ஆண்டாள் *களிவண்டெங்குங் கலந்தாற்போல் கமழ் பூங்குழல்கள் தடந்தோள்மேல் மிளிரநின்று விளையாட* என்றும், திருமங்கையாழ்வார் *மைவண்ணநறுங்குஞ்சி குழல்பின்தாழ மகரஞ்சேர்குழையிருபாடி லங்கியாட* என்றும் தனித்தனியே யநுபவித்த அழகுகளைச் சேரப்பிடித்து (49.) "ஸதம்ஸஸம்ஸஞ்ஜித குந்தலாந்திகாவதீர்ண கர்ணாபரணாட்ய கந்தர:" என்ற ஸ்ரீஸூக்தியினுல் அநுபவிக்கிறார். நாச்சியார் திருமொழியில் (7-7.) *செங்கமலநாண்மலர்மேல் தேனுகருமன்னம்போல், செங்கட்கருமேனி வாசுதேவனுடைய, அங்கைத்தலமேறி யன்னவசஞ் செய்யும் சங்கரையா!* என்ற பாசுரத்தை (55.) "ஸ்ரீமத்வநாத்ரிபதிபாணி தலாப்ஜ" என்ற ச்லோகத்தினுல் மொழிபெயர்த்தருளினர். திருவாய்மொழியில் (4-5-8) *தண்டாமரை சுமக்கும் பாதப்பெருமானை* என்ற பாசுரத்தில் "சுமக்கும்" என்றதன் ஸ்வாரஸ்யத்தை (62, 63.) இரண்டு சுலோகங்களினுல் வியாக்கியானித்தருளுகிறார். இதை அடியேனுடைய வியாக்கியானத்தில் விரியக் கண்டு கொள்வது. (ச்லோ. 92.) "ப்ரலயஜநீரபூரபரிபூரிதஸ்வ... .." இத்யாதி மஹத்தர ச்லோகமானது திருமங்கையாழ்வாருடைய "நிலையிடமெங்குமின்றி" என்கிற மத்ஸ்யாவதாரப் பாசுரத்திற்கு மொழி பெயர்ப்பாக மாத்திரமேயல்லாமல் வ்ருத்தபங்கியும் ஒன்றேயாக அமைந்தது. ச்லோகம் பாதந்தோறும் இருபத்துமூன்றெழுத்துகொண்டது. கலியன் பாசுரமும் அடிதோறும் ஒற்றொழித்து இருபத்துமூன்றெழுத்துக்கொண்டது. இப்படியாக ஸூந்தர பாஹுஸ்தவத்திலுள்ள அதிசயங்கள் அபரிமிதம்.

197. இனி வரதராஜஸ்தவத்தில் (ச்லோ. 59.) *பக்தாநாம் யத் வபுஷி தஹரம்* என்பதில் *ஆம்நாயாநாம் யதபி ச சிரோ யச்ச மூர்த்தா சடாரே: ஹஸ்த்யத்ரேர் வா கிமதிஸூகதம் தேஷு பாதாப்ஜயோஸ் தே* என்கிற உத்தரார்த்தம் பரமமதுரமானது. பேரருளாளனே! உபநிஷத்துக்கள், நம்மாழ்வாருடைய திருமுடி, ஸ்ரீஹஸ்திகிரிசிகரம் என்னுமிவற்றுள் உன் திருவடிக்குப் பாங்கானவிடம் எது? என்று கேள்வி கேட்கிறாரிதில். இங்கு நம்மாழ்வாருடைய திருமுடியையும் சேர்த்துக் கேள்வி கேட்கிற ஆழ்வானுடைய திருவுள்ளத்தை ஆரேயறிய வல்லார்?

அது நிற்க. திருவாய்மொழி மூன்றும்பத்தில் *முடியானே மூவுலகும் தொழுதேத்துஞ்சீரடியானே!* என்று தொடங்கும் எட்டாவது பதிகத்தின் ப்ரமேயத்தை [அதாவது, ஒரு இந்த்ரியம் மற்றோர் இந்த்ரியத்தின் வ்ருத்தியை விரும்புகின்றபடியை] *த்வக் ச த்ருக் ச நிபிபாஸதி ஜிஹ்வா விஹ்வலா ச்ரவணவத் பரவ்ருத்தௌ......* என்கிற சுலோகத்தினுல் விவரித்தருளினர். பொய்கையாழ்வார் தமது திருவந்தாதியில் *வரத்தால் வலிநினைந்து மாதவநின்பாதம்* என்கிற பாசுரத்தினுல் எம்பெருமானை நோக்கிக்

கேட்டிருக்கின்ற வொரு கேள்விக்கு *யதபராத ஸஹஸ்ரம் அஜஸ்ரஜம்* என்கிற சுலோகத்திஞல் மிகப் பொருத்தமான விடை வெளியிட்டுள்ளார். இது அடியேனுடைய வியாக்கியானத்திலிருந்தே அறிந்துகொள்ளத்தக்கது. இங்ஙனேமற்றுங் காண்க.

ஸ்ரீரங்கராஜஸ்தவே—(ச்லோ. 13.) *அமதம் மதம் மதமதாமதம் ஸ்துதம் பரிநிந்திதம் பவதி நிந்திதம் ஸ்துதம், இதி ரங்கராஜ முதஜூகுஷத் த்ரயீ* என்கிற விதில் பூர்வார்த்தத்தில் "அமதம் மதம்......" என்று ஸாதித்திருப்பது "யஸ்யா மதம் தஸ்ய மதம்" என்கிற உபநிஷத் வாக்யத்தை யுட்கொண்டதென்பது ப்ரஸித்தம். உடனே "ஸ்துதம் பரிநிந்திதம் பவதி நிந்திதம் ஸ்துதம்" என்று ஸாதிக்கிருர். இப்படி வேதத்தில் ஓதியிருப்பதாகக் காட்டுகிருர். இது ஸம்ஸ்க்ருத வேதத்தில் எங்கும் கிடையாது. தமிழ் வேதத்தில்தானுள்ளது. நம்மாழ்வாரருளிய பெரிய திருவந்தாதியில் (2) புகழ்வோம் பழிப்போம் புகழோம் பழியோம், இகழ்வோம் மதிப்போம் மதியோமிகழோம்* என்று தமிழிலுள்ளதை ஸம்ஸ்க்ருதமாக்கிஞர். ஆக, த்ரயீ என்கிற சொல்லால் உபய வேதங்களையும் நிர்தேசித்தருளினமை புலஞயிற்று. (மேலே 16.) *ஸ்வம் ஸம்ஸ்க்ருத த்ராவிடவேதஸூக்தை:* என்றருளிச் செய்ததும் காண்க.

திருமாலையில் தொண்டரடிப்பொடி யாழ்வார் *தெளிவிலாக் கலங்கல் நீர்சூழ் திருவரங்கம்* என்று திருக்காவேரி தெளிவின்றிக்கே கலங்கியிருக்கும்படியை அருளிச்செய்ததை (ச்லோ. 21.) "துக்தாப்திர் ஜநகோ ஜநந்யஹம் இயம்" என்கிற பெரிய ச்லோகத்திஞல் இன்சுவைப்படுத்தி யருளிச் செய்தார். (36) திருமங்கையாழ்வார் திருப்பணியான ப்ராகாரமண்டப கோபுராதிகளை *ஜிதபாஹ்யஜிநாதிமணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டபவப்ரகணுந் விததே பரகாலகவி: ப்ரணமேமஹி தாந்* என்கிற ச்லோகத்திஞல் தொழுதிறைஞ்சுகிருர். கோயிலில் ப்ராகாரமண்டப கோபுராதிகளில் திருவாழி சங்கு திருமண்காப்பு முதலிய வைதிக சின்னங்கள் பொலிவுற்றிருப்பதஞல் "வைதிகயந்நிவ" என்றருளிச்செய்தார். சந்த்ர புஷ்கரிணியின் கீழ்த்திசையிலே கோயில்கொண்டெழுந்தருளியிருக்கிற ஆழ்வார்கள் பதின்மரையும் "பூர்வேண தாம் .....பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸோ நிஷேதிவாம்ஸோ தச மாம் தயேரந்" என்கிற (41) ச்லோகத்திஞல் மங்களாசாஸநம் செய்தருளிஞர்.

(ச்லோ. 49.) சந்த்ரபுஷ்கரிணியின் கரையிலுள்ள திருப்புன்னை மரத்தைத் துதிக்கையில் "புந்நாகதல்லஜம் அஜஸ்ரஸஹஸ்ரகீதிஸேகோத்த திவ்ய நிஜ ஸௌரபமாமநாம:" என்றருளிச் செய்திருப்பதிற் காட்டிலும் ரஸவத்தரமான விஷயம் வேறில்லை. இந்த திருப்புன்னையினடியில் இருந்து கொண்டு திருவாய்மொழியின் மூலத்தை உருச்சொல்லுவாரும் அர்த்தங்களை யாராய்ச்சி செய்வாரும் ஓய்தலொழிவின்றிப் பலருண்டாகையாலே இம்முகத்தால் திருவாய்மொழியின் திவ்ய பரிமளமும் இதிலே கமழ்கின்றதென்கிருர்; இதஞல் நம் முன்னேர்களின் போதுபோக்கு தெரிவிக்கப்படுவதுடன் திவ்ய ப்ரபந்த ப்ரபாவாதிசயமும் தெரிவிக்கப்பட்டதாயிற்று.

அழகிய மணவாளனுடைய திருக்கண்ணேக்கத்திலிருக்கும் இரண்டு தூண்களுக்கு குலசேகராழ்வார் திருமணத்தூணென்று திருநாமம் சாத்தி "கடியரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும் மாயோனை மணத்தூணேபற்றி நின்று என்வாயாரவென்று கொலோ

வாழ்த்துநாளே" என்றருளிச் செய்தார்; இதில் 'மணத்தூண்' என்றதை (59ல்) *ஆமோதஸ்தம்பமென்று மொழிபெயர்த்தார்; "மணத்தூணருகில் நின்றுகொண்டு" என்னுமல் "மணத்தூணே **பற்றிநின்று**" என்றருளிச் செய்ததன் மருமத்தைக் கண்டறிந்து "சேஷசயலோசநாம்ருத நதீரயாகுலித லோலமாநாநாம், ஆலம்பமிவாமோதஸ்தம்பத்வய மந்தரங்க மபியாம;" என்றருளிச் செய்கிறார் (பட்டர்.) அழகிய மணவாளனுடைய திருக்கண்ணோக்கமாகிற அமுதவாற்றின் பெருவெள்ளமானது அநுபோக்தாக்களை ஒருமித்து நிலைநின்று அநுபவிக்கவொட்டாமல் தூக்கித்தள்ளி யசைக்குமளவில் அவர்கள் கைப்பிடிப்பாகப்பற்றிகொண்டு நிற்பதற்குப் பாங்காக நாட்டப்பட்ட தூண்களென்னலாம்படி யிருக்கிறதாம் திருமணத்தூண். இதனால் "மணத்தூணே **பற்றிநின்று**" என்றருளிச்செய்த ஆழ்வாருடைய உட்கருத்தை உள்ளபடி யுணர்ந்து விவரித்தாராயிற்று.

(ச்லோ. 78) *வடதள தேவகிஜடரவேதசிர: கமலாஸ்தந சடகோபவாக்வபுஷி ரங்கக்ருஹே சயிதம்* என்ற ச்லோகம் அதிவிலக்ஷணமாயமைந்தது. ஸ்ரீரங்கநாதன் தனது மந்திரத்தை திருவாய்மொழிதானே இப்படியொரு வடிவெடுத்து வந்ததாகத் திருவுள்ளம் பற்றி அதில் உகந்து பள்ளிகொண்டிருப்பதாக அருளிச்செய்தவிது மற்றையோருடைய மதிக்கு நிலமன்றே. திருவாய்மொழியில் (3-1-1.) *முடிச் சோதியாய் உனதுமுகச்சோதி மலர்ந்ததுவோ* என்ற ஒரு பாதத்தை *கிரீடசூட ரத்நராஜி: ஆதிராஜ்ய ஜல்பிகா, முகேந்துகாந்திருந்முகம் தரங்கிதேவ ரங்கிண:* (91.) என்று ஒரு ச்லோகமாக்கியருளினர். பெரிய திருவந்தாதியில் (72) *முதலாந் திருவுருவம் மூன்றென்பர், ஒன்றே முதலாகும் மூன்றுக்குமென்பர், முதல்வா! நிகரிலகுகாருருவா! நின்னகத்ததன்றே, புகரிலத தாமரையின்பூ* என்றருளிச்செய்த பாசுரத்தையே (ச்லோ. 116.) "த்ரயோ தேவாஸ் துல்யா:" என்கிற ச்லோகத்தாலே மொழிபெயர்த்தருளினர். இப்போது உத்தரசதகத்திற்குச் செல்லவில்லை. அடியேனுடைய வியாக்கியானங்களை ஆநுபூர்வியாகக் கடாக்ஷித்தருள்பவர்க்கு ஸ்தவங்களிலிருந்து அநவதிகமாக அநுபவிக்கக் கிடைக்குமாதலால் இங்கு இந்த ஸம்க்ஷேபமே பர்யாப்தமென்று நிற்கின்றேன். ... ... ... ❋

# அர்ச்சாவதார பரிபாலனம்.

அர்ச்சாவதாரத்தின் பெருமையை அருளிச்செய்யாநின்றபட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ-உத்தர சதகத்தில் **"அர்ச்சகபராதீந—அகிலாத்மஸ்திதி:"** என்றருளிச்செய்தவது அஜஹல்லக்ஷண மர்யாதையினல் "தஸ்கரபராதீநாகிலாத்மஸ்திதி:" என்றும் கொள்ள வேண்டியதாயிற்று. சிலமாதங்களுக்குமுன்பு ஆழ்வார்திருநகரி நவதிருப்பதிகளைச் சேர்ந்த வரகுணமங்கையில் உத்ஸவத்திருமேனி களவுபோய் புலன் கிடைக்காமலேபோக, 4-4-68ல் வேறு திருக்கோலம் எழுந்தருளச்செய்யப்பட்டு யதாவிதி ஸம்ப்ரோக்ஷணமும் செய்து முடிக்கப்பட்ட விஷயம் ஜகத்விதிதம். ஸ்ரீகாஞ்சீ (தீபப்ரகாச) விளக்கொளியெம்பெருமான் ஸன்னிதியில் சோரப்ரவேசமாகி பெருமாளுடைய கவசங்களைக் களைந்தெறிந்தும் வெள்ளிப் பாத்திரங்களைக் களவாடியும் செய்திருக்கிற தீம்புகள் அற்புதமானவை. எம்பெருமானுடைய விபவாவதாரத்தில் *காப்பாருமில்லை கடல்வண்ணவுன்னை* என்று யசோதைப்பிராட்டி வயிறுபிடித்தது அர்ச்சைக்குமாயிற்றந்தோ! ***உறகலுறகலுறகல்** என்ற பாசுரத்தை எத்தனையாயிரந்தடவை யநுஸந்தித்தாலும். போதாது. சிவாலயங்களிலும் இங்ஙனே களவுகள் நடந்துவருவதாகக் கேள்விப்படுகிறோம்.

# இதை வாசித்து ரஸிக்கவேணும்.

ஒரு பெரிய தமிழ்ப் பண்டிதர். அவர் பெயரை இங்குத் தெரிவிக்க விரும்பவில்லை. உண்மையில் மிகப்பெரிய வித்துவான். சிலநாள்முன் அவரை நாம் சந்திக்க நேர்ந்தது. அப்போது அவர் திவ்வியப்பிரபந்தங்களின் சீர்மையையும் அவற்றுக்கு அமைந்த வியாக்கியானங்களின் சிறப்பையும் மிகமிகப் பாராட்டிக் கூறி, தாம் அந்த வியாக்கியானங்களில் மிகமிகப் பரிச்ரமப்பட்டு ஆழ்பொருள்களையெல்லாம் அறியப்பெற்றது பரம பாக்கியமென்றும் கூறிக்கொண்டார். உண்மையில் இப்படி கூறிக்கொள்வதற்கு அவர் அதிகாரியே. ஆனாலும் திவ்யப்ரபந்த திவ்யார்த்தங்களில் அறிந்தவை சிலவே; அறியவேண்டியவை பலபல—என்பதை இவர் உணரவேணும் (அல்லது) இவர்க்கு உணர்த்தவேணும் என்று தோன்றி, திருவாய்மொழியில் (8—3—2.) *சரணமாகிய நான் மறைநூல்களுஞ்சாராதே, மரணம்தோற்றம் வான்பிணி மூப்பென்றிவைமாய்த்தோம்* என்ற பாசுரத்தையெடுத்துக் கூறி "இதன் பொருளை தேவரீர் எங்ஙனே க்ரஹித்திருக்கிறபடி?" என்று கேட்டேன். ஒரு நாழிகை ஆலோசித்துவிட்டு ஏதோ கூறி, தம்மனத்துக்கே த்ருப்தியில்லையென்று முடித்தார். வியாக்கியானங்களை சேஸவித்துச் சொல்லவேணும் என்றேன். உடனே வியாக்கியான ஸ்ரீகோசங்களை ஸம்பாதித்து ஸேவித்தார். "நான் கூறிய பொருள் தவறென்றுமட்டும் தெரிந்து கொண்டேன்; தெளிவான பொருள் விளங்கவில்லை" என்றார். தேவரீருடைய திவ்யார்த்த தீபிகையுரையை யெடுத்துக்காட்ட வேணுமென்றார். அதைப் பார்த்துவிட்டு 'இதை ஸ்ரீ ராமாநுஜனில் தனிப்பட வெளியிட்டால் நல்லது; மிகவும் ப்ரார்த்திக்கிறேன்' என்றார். அவருடைய வேண்டுகோளுக்கிணங்கி அது இங்குப் பிரசுரிக்கப்படுகின்றது.

சரணமாகிய நான்மறைநூல்களுஞ்சாராதே*
மரணந்தோற்றம் வான்பிணிமூப்பென்றிவைமாய்த்தோம்*
கரணப்பல்படை பற்றறவோடுங்கனலாழி*
அரணத்திண்படையேந்திய வீசற்காளாயே. 2

| | | | |
|---|---|---|---|
| சரணம் ஆகிய நால் மறை நூல்களும் சாராதே | ஐச்வர்யத்திற்குரிய உபாயங்களை விதிக்கின்ற நால் வேதங்களாகிற சாஸ்த்ரங்களை விட்டிட்டு | அரணம் திண் படை ஏந்திய ஈசற்கு ஆள் ஆயே | க்ஷேமங்கரமான திவ்யாயுதத்தைத் தரித்துள்ள எம்பெருமானுக்கு சேஷபூதர்களாயிருந்துவைத்தே [முமுக்ஷுக்களாகியு மென்றபடி] |
| கரணம் பல் படை பற்று அற ஓடும் கனல் ஆழி | உபகரணங்களையுடைய, பல சத்ருஸேனைகள் நிச்சேஷமாக வோடும்படி ஜ்வலிக்கின்ற திருவாழியாகிற | மரணம் தோற்றம் வான் பிணி மூப்பு என்ற இவை மாய்த்தோம் | இறப்பும் பிறப்பும் மஹாவியாதிகளும் கிழத்தனமுமான விவற்றைப் போக்கிக் கொண்ட வித்தனையொழிய வேறில்லையே. |

* * *—கீழ்ப்பாட்டில் ஐச்வர்யார்த்திகளை நிந்தித்துப் பேசினார்; இப்பாட்டில் கைவல்யார்த்திகளை க்ஷேபித்துப் பேசுகிறார். ஆனால் மேலெழப் பார்க்குமளவில், இதில் பிறருடைய நிந்தையிருப்பதாகப் புலப்படாது; இரண்டாமடியில் "மரணந்தோற்றம் வான்பிணிமூப்பென்றிவை மாய்த்தோம்" என்று ஆழ்வார் தம்மைப்பற்றி ஏதோ சொல்லிக் கொண்டிருக்கின்றாரேயல்லது பிறரைப்பற்றியொன்றும் சொல்லவில்லையே; தன்மையான வினைமுற்று இங்குக் காண்கிறதேயல்லது முன்னிலையான வினைமுற்று காணவில்லையே

யென்று பலரும் சங்கிக்க இடமுள்ளது. ஆழ்ந்து குறிக்கொண்மின்; முகுந்த மாலையில் *நாதே ந: புருஷோத்தமே* என்கிற ச்லோகத்தில் "யம்கஞ்சித் புருஷாதமம் கதிபயக் ராமேசம் அல்பார்த்ததம் ஸேவாயை ம்ருகயாமஹே நரமஹோ மூகா வராகா வயம்* என்றுள்ளது; புருஷோத்தமனான எம்பெருமான் நலமந்தமில்லதோர் நாடுதருவானாய் நிற்க, ஐயோ! அறிவிலிகளான நாம் க்ஷுத்ரபலன்களைத் தருமவனான ஓர் அற்பனைத் தேடியோடுகின்றோமே! என்று ஆத்ம நிந்தையே இதிலுள்ளது; ஆனாலும் இது தம்மைப் பற்றி இகழ்ந்து கூறுவதில் நோக்குடையதன்று; பிறரையிகழ்ந்து கூறுவதிலேயே முழுநோக்கு. உலக வழக்கிலும் இஃது உள்ளது. "நீங்கள் நன்றாக வாழ்ந்து விட்டீர்களே!" என்று பிறரை ஏசிச் சொல்லவேண்டுமிடத்து 'நாம் நன்றாக வாழ்ந்து விட்டோமே!' என்று தம்மையே ஏசிச் சொல்லுவதுண்டு. அந்த நியாயமே இங்குக் கொள்ளத்தக்கது.

"கைவல்யார்த்திகளும் தமக்குத் துணையல்லரென்கிறார்" என்பது இப்பாட்டுக்கு ஆறாயிரப்படி யவதாரிகை. கைவல்யார்த்திகளென்கிற பதமும் இப்பாட்டில் இல்லை; அவர்கள் துணையல்லர் என்பதைத் தெரிவிக்கும் வாசகமும் இதில் வியக்தமாக இல்லை; ஆழ்ந்து நோக்குதலில் கிடைக்குமிது.

**சரணமாகிய நான்மறை நூல்களுஞ்சாராதே** என்றது-க்ஷுத்ரப்ரயோஜனங்களை விதிக்கும் முகத்தால் நமக்குத் தஞ்சமாகிய வேதசாஸ்த்ரங்களைப்பற்றி க்ஷுத்ர பலன்களை லபித்துப்போகாதே என்றபடி. இதுவொரு நன்மையே; இந்த நன்மைக்குமேல் மற்றொரு நன்மையுமுண்டு; அது, **கரணப்பல்படை**யென்று தொடங்கிப் பின்னிரண்டடிகளாற் சொல்லப்படுகிறது. விரோதி நிரஸனத்தில் வல்லவனான திருவாழியாழ்வானைத் தாங்கி யுள்ள எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருத்தல் கைவல்யநிஷ்டர்களுக்குமுண்டே; ஸாதநாநுஷ்டான தசையில் பகவத் ப்ராப்திகாமர்களுக்குப்போலே ஆத்மப்ராப்திகாமர் களுக்கும் பகவத்பஜனமுண்டாகையாலே.

ஆக, சரணமாகிய நான்மறைநூல்களும் சாராமலிருந்தும் ஈசற்கு ஆளாகியிருந்தும் மரணம் தோற்றம் வான்பிணிமூப் பென்றிவைமாய்த்தலாகிற ஜராமரணமோக்ஷமே தவிர, பகவத் கைங்கர்ய ப்ராப்தியென்பது கேவலர்க்குக் கிடையாமையாலே அவர்களையும் க்ஷேபித்தாராயிற்று. மரணம் தோற்றம் வான்பிணிமூப்பென்றிவை மாய்த்தீர்களே தவிர, வேறு அத்தாணிச் சேவகம் பெற்றீர்களில்லையே; ஆகையாலே நீங்களும் எனக்குத் துணையல்லீர் என்றதாக முடிந்தது.

**கரணப்பல்படை** இத்யாதிக்கு இரண்டுவகையாகப் பொருள் நிர்வஹிப்பதுண்டு;— **கரணம்** என்று உபகரணங்களைச் சொன்னபடியாய், யுத்தத்திற்குவேண்டிய உபகரணங் களையுடைத்தாய்ப் பலவகைப்பட்டதான **படை**—சத்ருக்களின் சேனையானது, **பற்று அற** —மிச்சமில்லாமே, ஓடும்படி கனல்கின்ற **திருவாழி**—என்பது ஒருவகையான பொருள். (2) **கரணம்** என்று இந்திரியங்களுக்கும் பேராகையாலே, **கரணப்பல்படை**—இந்திரிய ஸமூஹமானது, **பற்று அற**—விஷயங்களில் பற்றற்று மீளும்படியாக, என்று மற்றொரு பொருள். இப்பொருளில், **பற்றற** என்பது **ஆளாயே** என்பதில் அந்வயிக்கும். "ஓடுங் கனலாழியரணத்திண்படையேந்திய ஈசற்கு, கரணப்பல்படைபற்றற ஆளாயே" என்று இங்ஙனே அந்வயங்காண்க. ... ... ... 2



# எழுபத்தேழு பெரியார்களின் பெருமை.

(முன் தொடர்ச்சி)

## 44. ஸ்ரீமதுபயவே. ஷஷ்டி திருவேங்கடாசார்யஸ்வாமி.

இவர் அடியேனுடைய ஸாக்ஷாந் மாதுலர். அடிக்கடி அடியேன் உதாஹரிக்கும் ஸ்ரீமத்பரமஹம்ஸ. அழகியமணவாள ராமாநுஜ—ஷஷ்டி ஜீயர்ஸ்வாமியின் பூர்வாச்ரம—ஔரஸகுமாரர். ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியில் ந்யாயமீமாம்ஸைகளை அதிகரித்து ஸ்ரீ பாஷ்யமும் ஸேவித்து அனந்தாழ்வார் வாதார்த்தங்களிலும் தேர்ச்சி பெற்றவர். ஜீயர்ஸ்வாமி ஸன்னிதியிலே ஸம்பிரதாய க்ரந்தங்களையெல்லாம் பலகால் ஸேவித்தவர். இவருடைய அப்ரதிமபாண்டித்யம் ப்ரகாசிக்க வழியில்லாமல் போயிற்று. ஏனென்னில்; அடியேனுடைய திருத்தகப்பனுர் இளமையில் திருநாடலங்கரித்தபடியால் எங்களுடைய பூர்விகமான சுரோத்ரியக்ராம பரிபாலனபாரத்தை அடியேனுடைய திருத்தாயார்க்குத் துணையாக இவர் ஏற்றுக்கொள்ள நேரிட்டது. க்ராமத்தில் பலவகையான வ்யவஹாரங்களும் தொடர்ந்ததனுல் இவர் அஸ்தமிதாங்யபாவராய் அவற்றிலே வியாபரிக்க நேர்ந்து ப்ரவசனத்திற்கு வழியில்லாமல் போயிற்று. ஓர் இருபத்தைந்து ஸம்வத்ஸரகாலம் இங்ஙனேயான காலக்ஷேபத்தினுல் வித்யாவ்யாஸங்கம் அநவகாசபராஹதமாயிற்று. ஆயினும் சாஸ்த்ரங்களில் ஆழ்ந்த வ்யுத்பத்தியுடையவராயிருந்தார். ❋

## 45. ஸ்ரீமதுபயவே. திருமலைவிஞ்சிமூர். ஸ்ரீநிவாஸாசாரியர்ஸ்வாமி.

இந்த ஸ்வாமியும் ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியில் ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களையதிகரித்து ஸம்ப்ரதாய க்ரந்தங்களிலும் வல்லமைபெற்று வித்வானுக விளங்கினவர். இவருடைய குடும்பம் பரம்பரையாய் பரமைகாந்தியார் என்று வழங்கப்பட்டு வந்தது. அதற்கிணங்க ஸதாசார சீலமான குடும்பம். வேதாத்யயனமும் திவ்யப்ரபந்தாத்யயனமும் அவிச்சின்னமாக நிகழப்பெற்ற குடும்பம். ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஷஷ்டி ஜீயர் ஸ்வாமிக்கு அடியேனுடைய திருத்தகப்பனுர் போலவே இவரும் ஒரு ஜாமாதா. இவருடைய ஏகபுத்ரரான ஸ்ரீமான். தி. வி. சிங்கராசாரியர் உபயவேத பாரங்கதராய் ப்ரவசன துரந்தரராய் பகவத்கைங்கர்ய நிரதருமாய் விளங்கிவருகின்றுர். இந்த ஸ்வாமியின் திருத்தம்பியாரே ஸ்ரீஉவே. திருமலை விஞ்சிமூர் பாஷ்யகாரர் ஸ்வாமி யென்று ப்ரஸித்தராய் விளங்கினவர். அவருடைய திருக்குமாரரும் ஸ்ரீமான். தி. வி. நரஸிம்ஹாசாரியரென்பவர் ப்ரதிஷ்டிதராய்த் திருவல்லிக்கேணியில் விளங்கி வருகிறுர். ❋

## 46. ஸ்ரீமதுபயவே. அரசாணிபாலை. திருவேங்கடாசார்யஸ்வாமி.

இந்த ஸ்வாமியும் காஞ்சீபுரத்தில் ஸ்திரவாஸமாக வந்து சேர்ந்து ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியிலேயே ந்யாய சாஸ்த்ரத்தைப் பூர்த்தியாக அதிகரித்து வாவதூகராயும் விளங்கினுர். ஸ்ரீமதுபயவே. ஜகத்குரு. காதிஸ்வாமி ஸன்னிதியில் (யாத்திரையில்) சில வாண்டுகள் ஆஸ்தான வித்வானுக எழுந்தருளியிருந்தார்.

புதுக்கோட்டை, வனபர்த்தி, கத்வால் முதலான ஸம்ஸ்தானங்களில் பலவாண்டுகள் வர்ஷாசனம் பெற்று வந்தார். இவர் வித்யார்த்தியான ஸமயத்தில் காஞ்சீவாஸம் பண்ணினுரேயன்றி வித்வானுன பிறகு பெரும்பாலும் விதேசங்களிலேயே ஸஞ்சரித்து ப்ரவசனங்கள் செய்து போந்தார். இவர்க்கு வித்வான் திருவேங்கடாசாரியரென்றே ப்ரஸித்தியிருந்தது. ... ... ... ❋

## 47. ஸ்ரீமதுபயவே. திருமலை ஈச்சம்பாடி ஸ்ரீநிவாஸராகவாசாரியர்ஸ்வாமி.

இந்த ஸ்வாமி பதினைந்து ஸம்வத்ஸரங்களுக்குமுன்பு திருக்குறுங்குடிக் கெழுந்தருளி உத்தமாச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டு நாலைந்து ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு திருநாடலங்கரித்தவரென்பதை முன்னம் விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். பூர்வாச்ரமத்தில் ஸ்ரீ காஞ்சியிலேயே யெழுந்தருளியிருந்து அப்போது வானமாமலை மடத்தில் நடந்துகொண்டிருந்த வித்யாசாலையில் ஸ்ரீமதுபயவே. ஷஷ்டி கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி ஸன்னிதியில் ஸாஹித்ய வியாகரணங்களதிகரித்து ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியில் ஸ்ரீ பாஷ்யம் ஸேவித்திருந்தவர். ஆழ்வார் திருநகரியில் ப்ரக்க்யாதரா யெழுந்தருளியிருந்த [ஆத்தான் திருமாளிகையைச் சேர்ந்த] ஸ்ரீமத் பரமஹம்ஸ. அப்பன் ஜீயர்ஸ்வாமியின் ஸன்னிதியில் பகவத் விஷயரஹஸ்யாதிகள் ஸேவித்து ப்ரவசன ப்ரவீண ராயுமெழுந்தருளியிருந்தார். இளமையில் இவ்விடத்து ஸ்ரீமத். அழகிய மணவாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி மடத்தில் 'வித்யாவிகாஸிநீ ஸபா' என்றொரு ஸபை ஏற்பாடு செய்து ஞாயிற்றுக்கிழமை தவருமலும் மற்றும் ஸமய விசேஷங்களிலும், வெளியூர் வித்வான்கள் யாத்ருச்சிகமாக எழுந்தருளுங்காலல்களிலும் உள்ளூர் வித்வான்களாலும் வெளியூர் வித்வான்களாலும் உபந்யாஸங்கள் நடத்தப்பட்டுவந்தன. அந்த ஸபைக்கு இந்த ஸ்வாமி அக்ராஸனராயும் அடியேன் கார்யதர்சியாயுமிருந்துவந்தகாலம் நேற்று போலுள்ளது. இந்த ஸ்வாமி உத்தமாச்ரமஸ்வீகாரம் செய்துகொண்ட பிறகு ஒரு பர்யாயம் காஞ்சிக்கெழுந்தருளிச் சில மாதங்கள் வஸித்திருந்து மீண்டும் திருக்குறுங்குடிக்கே யெழுந்தருளி அவ்விடத்திலேயே திருநாடலங்கரித்தார். ... ❋

## 48. ஸ்ரீமதுபயவே. இளங்காடு. ரங்காசாரியர்ஸ்வாமி.

காஞ்சியில் திருப்புட்குழி ஸ்வாமியென்று ப்ரஸித்தராயெழுந்தருளியிருந்த மஹா ஸ்வாமியின் திருக்குமாரரான ஸ்ரீமத். பட்டண்ணுஸ்வாமியின் பெருமையைக் கீழே விவரித்திருந்தேன். அவருடைய அந்தேவாஸியான இந்த இளங்காட்டுஸ்வாமி பரமபதித்து எட்டு வருஷமேயாகிறது. இவர் நியாய சாஸ்த்ரத்தில் மஹா நிபுணராய் அதிகரண ஸாராவளியையும் தத்வமுக்தா கலாபத்தையும் கண்டஸ்தமாகக் கொண்டிருந்தார். ஸ்ரீமதுபயவே. காதிஸ்வாமி வடநாட்டு ஸஞ்சாரமாக எழுந்தருளுங்காலங்களில் அடியேன் இந்த ஸ்வாமியிடத்திலே நியாயபாடம் வாசித்ததுண்டு. "சமதமகுணஸிந்துஸ் ஸாத்விகேஷ்வக்ரகண்ய:" என்பதற்கு மிகப் பொருத்தமானவர் இந்த ஸ்வாமி. நெடுங் காலம் காஞ்சியில் வாழ்ந்து கலாவைஷம்யச் சண்டை, மடமுனித்ரயச் சண்டை முதலான எந்த விவாதத்திலும் த்ரிகரணத்தாலும் ஸம்பந்தப்படாமல் ஸர்வபூதஸுஹ்ருத்தாக விளங்கின பெருமை இந்த ஸ்வாமிக்கு அஸாதாரணமானது. தேவப்பெருமாளுடைய

திருவீதிப் புறப்பாடுகளில் நியமேந அந்வயிப்பர். வேதபாராயண கோஷ்டிக்குப் பின்னுல் ஏகாந்தசீலராக எழுந்தருள்வர். தம்முடைய நியதமான காரியங்கள் தவிர வேறென்றில் கண் செலுத்தாமலும் செவி கொடாமலுமிருந்த பெருமைவாய்ந்த இந்த ஸ்வாமியின் இயல்பை அநுகரிக்கவல்லாராருமில்லை. ... ... ... ❋

## 49. ஸ்ரீமதுபயவே. நாவல்பாக்கம். நரஸிம்ஹாசார்யஸ்வாமி.

சிஷ்டாக்ரேஸரரும் வித்வத்வரேண்யருமான இந்த மஹாஸ்வாமி மைஸூரில் சாஸ்த்ராப்யாஸங்கள் செய்து ராஜமன்னர் ஸன்னிதி முதலானவிடங்களில் சிலவாண்டுகள் வாழ்ந்து ஐம்பது திருநக்ஷத்ரங்களுக்குமேல் காஞ்சீவாஸத்தையே ஸ்திரமாகக்கொண்டிருந்தவர். இடையில் காஞ்சியில் தீர்த்தகஷ்டம் நேர்ந்தபோது இரண்டொரு ஸம்வத்ஸரம் பழைய சீவரத்தில் பாலாற்றங்கரையில் வாஸமாகவெழுந்தருளியிருந்தார். திருமேனி திடமாக இருந்தவரையில் உஞ்சவ்ருத்தியையே ஜீவிகையாக அவலம்பித்திருந்தார். வேதாத்யயனஸம்பத்துங் கொண்டிருந்தார். இந்த ஸ்வாமியிடம் சாஸ்த்ரங்கள் வாசித்து வித்வான்களானவர்கள் பலர். அன்னவர்களில் இப்போது நாவல்பாக்கத்தில் ஏகாந்த சீலராக வாழ்பவரான ஸ்ரீமதுபயவே. அய்யா. தேவநாதாசாரியர்ஸ்வாமி தலைமைபெற்றவர். இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து ஐந்தாறு ஸம்வத்ஸரமேயாகிறது. காஞ்சியில் சிலவாண்டுகள் ஸ்ரீரங்க ராஜவீதியிலெழுந்தருளியிருந்தவிவர் தென்னண்டைமாடவீதியில் ஒரு திருமாளிகையை ஸ்வகீயமாக அமைத்துக்கொண்டு அதிலேயே பலவாண்டுகள் எழுந்தருளியிருந்தார். அப்போது ஒருநாள் அடியேனையழைத்து 'ஏகாந்த வாஸத்திலும் ஆற்றங்கரையோர வாஸத்திலும் ருசியுடைய நான் இந்த வீதிக்குவந்த காரணம் தெரியுமோ?' என்ருர். 'ஸாதிக்கவேணும்' என்றேன். "தினப்படி ப்ரபாதத்தில் நீங்கள் நடத்திவரும் வேதபாராயண கோஷ்டியை ஸாக்ஷாத்தாக அநுபவிப்பதற்கென்றே இவ்வீதி வந்திருக்கிறேன்' என்று ஸாதித்தார். திருமாளிகை வாசலில் கோஷ்டி வருவதற்குச் சற்று முன்னுடியே யெழுந்து படிக்கட்டில் நின்றுகொண்டு ஸஹாநு ஸந்தானமும் செய்துபோருவர். இதை யெழுதும்போது *தே ஹி நோ திவஸா கதா:* என்று தளர்கின்றேன். ... ... ... ... ❋

## 50. ஸ்ரீமதுபயவே. திருக்கோட்டியூர். ஸௌம்ய நாராயணுசார்யஸ்வாமி

கோஷ்டீபுரம் ஸ்வாமியென்றே ப்ரஸித்தி பெற்றிருந்தவர் இந்த ஸ்வாமி. நியாய சாஸ்த்ரத்திலும் உபயவேதாந்தங்களிலும் ஆழ்ந்த ஞானமுடைய வித்வத்வரேண்யராக விளங்கினர். (கீழே ப்ரஸ்தாவித்த) ஸ்ரீமதுபயவே. ஸ்ரீரங்கம் எம்பார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் ஸாமாந்ய சாஸ்த்ரமதிகரித்து அந்த ஸ்வாமியும் மெச்சும்படியாகத் தேர்ச்சி பெற்றவர். தமது திருத்தகப்பனுரான ஸுந்தரகோபாலாசாரியர் ஸ்வாமி ஸன்னிதியில் அத்யாத்ம சாஸ்த்ரங்கள் பயின்று நம்பெருமாள் ஸன்னிதியிலும் பெருமாள் கோயிலிலும் மதுராந்தகத்திலும் பலநாள் வஸித்து உபயவேதாந்தங்களும் ப்ரவசனம் செய்தவர். இதிஹாஸபுராண ப்ரவசனத்திலும் வல்லவர். கோஷ்டீபுரம் ஸ்வாமியென்று நாமமாத்ரமேயொழிய அவ்வூரில் வஸித்தது ஸ்வல்பகாலமேயாகும். இந்த ஸ்வாமியிடத்தில் அடியேன் விசேஷித்துக் கண்ட குணம் பரமப்ராமாணிகத்வம். நிக்ரஹஸ்தானங்களுக்கு இடமற வ்யவஹரிப்பர். ஈட்டுப்ரவசனத்தில் அந்தரங்கமான விச்வாஸமுள்ளவர். ... ❋

## 51. ஸ்ரீமத் பரமஹம்ஸ. கருடபுரம் ஸ்வாமி.

இந்த மஹாஸ்வாமியை க்ருஹஸ்தாச்ரமத்திலிருந்து நன்கறிவேன். முதன்முதலாக மதுராந்தகத்தில் (க்ருஹஸ்தராய்) ஸேவைஸாதித்து பரமக்ருபை காட்டியருளினர். உத்தமாச்ரமம் ஸ்வீகரித்தபின் பெரும்பாலும் பெருமாள் கோயிலிலேயே யெழுந்தருளி யிருந்ததாக நினைவு. நெல்லூர் ஜில்லாவில் மங்களம்பாடியென்கிற அக்ரஹாரத்தில் (பூர்வாச்ரமத்தில்) சிலவாண்டுகள் எழுந்தருளியிருந்து அங்குள்ளாரைத் திருத்திப் பணிகொண்டதாக அங்குள்ளார் நாளைக்கும் க்ருதஜ்ஞதாநுஸந்தானம் பண்ணிப் போருகிறார்கள். **"ஸ்மிதபூர்வாபிபாஷீ"** என்கிற விசேஷணம் ஸ்வாமிக்கு மிகப் பொருத்த மானது. தேவப்பெருமாளுடைய மங்களாசாஸனம் அசக்தியிலுங்கூட நாள் தவறாமல் செய்து போருவர். நித்யம் ப்ரவசனநிரதராய் எழுந்தருளியிருப்பர். காஞ்சியிலேயே திருநாட்டுக்கெழுந்தருளிப் பதினைந்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாயிற்று. அஸக்ருத் ஸ்மரணீயர்களான புண்ய புருஷர்களில் தலைவர். திருப்பதியிலெழுந்தருளியிருந்த ஸ்ரீமதுபயவே. கபிஸ்தலம். தேசிகாசார்ய ஸ்வாமியிடத்தில் ஸாமான்ய சாஸ்த்ரமதிகரித்த தாக ஸாதிக்கக் கேட்டிருந்தேன். ஸ்ரீ பாஷ்ய ப்ரவசனத்தில் உத்தமாதிகாரி. ... ❁

## 52. ஸ்ரீமதுபயவே. கபிஸ்தலம் தேசிகாசார்யஸ்வாமி.

இந்த ஸ்வாமி மிகவும் ப்ரக்க்யாதராய் மஹாமஹோபாத்யாய பட்டமும் பெற்ற ப்ரபல வித்வான். வேதாந்த சாஸ்த்ரத்தில் உபகாரகங்களான சில க்ரந்தங்களும் இயற்றி னவர். த்வைதிகளோடும் அத்வைதிகளோடும் வாதம் செய்து புகழ் பெற்றவர். திருப்பதியி லெழுந்தருளியிருந்த ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை. ஸ்ரீரங்காசாரியர்ஸ்வாமி, அவருடைய திருத்தமையனாரான பங்காராசாரியர்ஸ்வாமி ஆகிய இருவர் ஸந்நிதியிலும் ஸாமான்ய சாஸ்த்ரங்கள் வாசித்துப் பல மதங்களிலும் பல பேர்களை வித்வான்களாக்கி னவர். அடியேனுடைய பந்துக்கள் திருப்பதியில் அதிகமாகவுள்ளபடியால் இளமையில் பலகால் அவ்விடம் விடைகொள்ள நேரும். அந்த ஸமயங்களிலெல்லாம் ஸ்வாமியோடு நெருங்கிப்பழகவும் நேரும். 1930ல் வேதலக்ஷண விவாதம் ப்ரபலமாக நடந்துகொண் டிருந்தபோது அடியேன் திருப்பதிக்கு விடைகொண்டிருக்கையில் ஸ்வாமி தாமாகவே யழைத்து இந்த விவாதஸ்வரூபமென்னவென்று விசாரித்தறிந்து திருவுள்ளமுவந்து அபிநந்தன பத்ரிகையும் ஸாதித்தது ஜகத்ப்ரஸித்தம். அதன்பிறகே அந்த விவாதம் சாந்தமாயிற்று ... ... ... ... ... ❁

## 53. ஸ்ரீமதுபயவே. கிடாம்பி. அண்ணங்கராசாரியர்ஸ்வாமி.

இந்த ஸ்வாமி திருப்பதி கிடாம்பி அப்பாஸ்வாமி யென்றே ப்ரஸித்தர். வியாகரண வேதாந்தங்களில் வல்லவராய் மஹாசிஷ்டாக்ரேஸரராய் விளங்கினவர். ஸ்ரீமத் புரிசை ஸ்வாமிக்கு *தக்ஷிணோ பாஹு:* என்னும்படி விளங்கினவர். ப்ரதிவாதிபயங்கர வம்சயர்களினுடைய தௌஹித்ரஸந்ததியாகையாலே அண்ணங்கராசாரியரென்று திருநாமம் பூண்டவர். நெடுங்காலம் திருப்பதிக்குத் திலகமாக விளங்கின மஹான். திருநாட்டுக்கெழுந்தருளி நாற்பது ஸம்வத்ஸரங்களுக்கு மேலாயிற்று. ... ❁

# எம்பெருமானார் ஸ்ரீஸூக்தியநுபவம்.

(ஸ்ரீ காஞ்சீ. ப்ரதிவாதிபயங்கரம். அண்ணங்கராசாரியர்)

**23—4—68 முதல் 3—5—68 அளவாக ஸ்ரீபெரும்பூதூரில் நடைபெற்ற ஸ்வாமியுத்ஸவத்தில் ஸ்ரீ பாஷ்ய—கீதா பாஷ்ய—கத்யங்களிலிருந்து அடியேனுரைத்த பதினொரு விஷயங்கள்.**

## 1. ஸ்ரீ பாஷ்யகார ஸ்ரீஸூக்தி பரிஸ்திதி

கீதாபாஷ்யத்திலோ ஸ்ரீ பாஷ்யத்திலோ ஸ்வாமி யருளிச்செய்யும் ஸ்ரீஸூக்திகளில் நெஞ்சையுருக்கும்படியான ஒரு அதிசயம் அடியேனுடைய அநுபவத்தில் காண்கிறது. இவ்வதிசயம் வேறு எந்த பாஷ்யத்திலும் காணமுடியாதது. அஃது என்னென்னில், மூலத்தில் பரம புருஷனுடைய ப்ரஸ்தாவம் வருமிடங்களில் ஆழ்வார்களுடைய திவ்ய ஸூக்திச் சாயையிலே அவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிப் பெருமைகளை விளக்கிப் பல விசேஷணங்களை அருளிச்செய்தாலொழிய ஸ்வாமிக்குத் தரிப்பு உண்டாவதில்லை. இங்கு ஓரிடமெடுத்துக் காட்டுகிறேன். கீதையில் ஒன்பதாமத்யாயத்தில் முடிவு ச்லோகம் **''மந்மநாபவ மத்பக்த:''** என்பது. இதில் ***மந்மநா பவ*** என்பதற்கு என்னிடத்தில் மனத்தை வைத்திடு என்று பொருள். இப்பொருள் யாவர்க்கும் தெரிந்ததே, எளிதில் தெரியக்கூடியதே என்கிற கருத்தினால் மத்வபாஷ்யகாரர் அடியோடு அர்த்தம் செய்யவே யில்லை. சங்கராசாரியர் ''மயி வாஸுதேவே மந: யஸ்ய தவ ஸ: த்வம் மந்மநாபவ'' என்று உரைத்தார். என்னிடத்தில் என்பதற்கு வாஸுதேவனாகிய என்னிடத்தில் என்று அர்த்தம் என்பதாக விவரித்தாராயிற்று. இனி ஸ்வாமியின் பாஷ்யத்தை யெடுத்துக் கொள்வோம்: அவ்விடத்துப் பங்க்திகளை ஸேவித்தால் கல்நெஞ்சினனுக்கும் கண்ணீர் பெருகும்.

''மந்மநா பவ—மயி ஸர்வேச்வரே நிகிலஹேய ப்ரத்யநீககல்யாணை கதாநே ஸர்வஜ்ஞே ஸத்யஸங்கல்பே நிகில ஜகதேககாரணே பரஸ்மிந் ப்ரஹ்மணி புருஷோத்தமே புண்டரீக தலாமலாயதேக்ஷணே ஸ்வச்சநீலஜீமூத ஸங்காசே யுகபதுதித திநகரஸஹஸ்ர ஸத்ருச தேஜஸி லாவண்யாம்ருதமஹோததௌ உதாரபீவர சதுர்பாஹௌ அத்யுஜ்ஜ்வல பீதாம் பரே அமலகிரீட மகரகுண்டலஹாரகேயூரகடகபூஷிதே அபார காருண்ய ஸௌசீல்ய ஸௌந்தர்ய மாதுர்யகாம்பீர்யௌதார்ய வாத்ஸல்ய ஜலதௌ அநாலோசித விசேஷா சேஷலோகசரண்யே ஸர்வஸ்வாமிநி தைலதாராவத் அவிச்சேதேந நிவிஷ்டமநா பவ'' என்கிற இவ்வளவும் அதிகம்பீரமான ஸ்வாமி ஸ்ரீஸூக்தியாகும்.

இந்த மஹாவாக்யத்தில் எம்பெருமானைப் பற்றின விசேஷணங்கள் பதினெட்டு உள்ளன. இத்தனை விசேஷணங்கள் இங்கு அவசியமோவென்று சிலர் நினைக்கக்கூடும். உண்மையில் அவச்யமன்றென்றும் சொல்லலாம். விஸ்தரத்தில் ருசியில்லாதவரான ஸ்வாமி இவ்வளவு ஏன் அருளிச்செய்தாரென்று ஆலோசிக்கவேண்டும். ஸ்வாமி யெம்பெருமானார் 'பண்டருமாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய் விண்டிட வெங்களிராமானுசமுனி வேழம்' என்றும் 'கலிமிக்க செந்நெற்கழனிக்குறையல் கலைப்பெருமானொலி மிக்க

பாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து அதனால் வலிமிக்க சீயமிராமானுசன்' என்றும் நூற்றந்தாதியில் அமுதனார் அருளிச்செய்தபடியே ஆழ்வாரருளிச் செயற்கடலில் அநவரதம் அவகாஹித்தவராதலால் அதன் பலனாகவே இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளை ஸ்வாமி பலகாலும் அருளிச்செய்ய ப்ராப்தமாகிறது. கண்ணபிரான் தன்னிடத்தில் பக்தி பண்ணும்படி விதிக்கிற இவ்விடத்தில் எம்பெருமான் தன்னுடைய இத்தனை விசேஷங்களை யெடுத்துக்காட்டாவிடில் எங்ஙனே பக்தியுண்டாகும். அவனுடைய ஸ்வரூப வைலக்ஷண்யத்தையும் திவ்யமங்கள விக்ரஹ ஸௌந்தர்யத்தையும் திவ்ய பூஷணாதி வைசிஷ்ட்யத்தையும் திருக்கல்யாண குணபௌஷ்கல்யத்தையும் எடுத்துக் காட்டுவதானது கண்ணபிரான் தானே இவற்றைபெடுத்துரைத்து இவற்றிலேயீடுபடும்படி சொல்லுவதாகவன்றோவுள்ளது. இதர பாஷ்யகாரர்களுக்கு திவ்யப்ரபந்த ஸம்பத்து சிறிதுமில்லாமையினாலேயே அவர்கள் இப்படிப்பட்ட விசேஷணங்களை ஓரிடத்தில்கூட எழுதிவைக்க ப்ரஸக்தியில்லையாயிற்று.

ஸ்ரீபாஷ்யத்திலும் இங்ஙனே ஓரிடம் காட்டுகிறேன். அதில் கடைசியான ஸூத்திரம் [**அநாவ்ருத்திச் சப்தாத் அநாவ்ருத்திச் சப்தாத்**] என்பது. இங்கு மூலத்தில் பரமபுருஷனுடைய ப்ரஸ்தாவமேயில்லை. பரமபதத்தைச் சென்றடைந்த முக்தர்கள் மீண்டும் இந்நிலத்தில் திரும்பி வருவது உண்டா இல்லையா? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக இந்த ஸூத்ரம் அவதரித்துள்ளது. 'புநராவ்ருத்தி கிடையாதென்று சாஸ்த்ரம் சொல்லியிருக்கையாலே அது இல்லை' என்றிவ்வளவே ஸூத்ரம் சொல்லி நின்றது. இதை விவரிக்குமிடத்து ஸ்வாமியெம்பெருமானார் "பகவானொருவனுளனென்று எந்த சாஸ்த்ரம் அறிவிக்கின்றதோ அந்த சாஸ்த்ரமே பகவானை அடைந்தவர்க்குப் புநராவ்ருத்தியில்லையென்றும் தெரிவிக்கின்றது" என்றருளிச் செய்கிறார். இங்கு "யதா பரமபுருஷ: அஸ்தீதி சப்தாத் அவகம்யதே ....." என்றிவ்வளவே அருளிச்செய்தால் போதுமானது; ஆயினும் ஸ்வாமி இங்கே அருளிச்செய்வது பாரீர்;—

> "யதா நிகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந: ஜகஜ்ஜந்மாதிகாரணம் ஸமஸ்தவஸ்து விலக்ஷண: ஸர்வஜ்ஞ: ஸத்யஸங்கல்ப: ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதி: நிரஸ்த ஸமாப்யதிகஸம்பாவந: பரமகாருணிக: பரப்ரஹ்மாபிதாந: பரமபுருஷ:......"

என்று இவ்வளவு விசேஷணங்களை யருளிச்செய்கிறார்.

இங்ஙனே ஓரிடமன்று இரண்டிடமன்று; பலபலவிடங்கள் காணலாம். மற்ற பாஷ்யகாரர்களுக்கு இப்படிப்பட்ட வாக்விந்யாஸம் பண்ணத் தெரியாமலில்லை. பகவானிடத்தில் பக்தியில்லாமையுமில்லை. ஆயினும் அவர்களுடைய கையிலிருந்து இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளில் ஏகதேசமும் அவதரிக்கக் காண்கிறிலோம். 'செந்தாமரைத் தடங்கண் செங்கனிவாய் செங்கமலம் செந்தாமரையடிக்கள் செம்பொன் திருவுடம்பே' என்றும் 'கைவண்ணம் தாமரை வாய் கமலம்போலும் கண்ணிணையுமரவிந்தமடியுமஃதே' என்றும் 'செக்கமலத்தலர்போலும் கண்கைகால் செங்கனிவாய் அக்கமலத்திலைபோலுந் திருமேனி யடிகளுக்கே' என்றும் வாய்வெருவுகின்ற ஆழ்வார்களின் ஈரச்சொற்களிலே ஆழங்காற்பட்டிருக்கு மாசிரியர்களுக்கே இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்தி விந்யாஸவைபவம் வாய்க்கின்றது என்னத்தட்டுண்டோ? ... ... ❁

## 2. விநதவிவித பூதவ்ராத விசேஷார்த்தம்.

ஸ்ரீபாஷ்ய மங்களச்லோகமான *அகில புவநஜந்மேத்யாதி ச்லோகத்தில் இரண்டாவது பாதம் "விநதவிவித பூதவ்ராத ராக்ஷைக தீக்ஷே" என்பது. முதல் பாதத்திலேயே ரக்ஷணர்த்தகமான ஸ்தேம சப்தத்திஞல் எம்பெருமான் ஸர்வ ரக்ஷகனென்னுமிடம் சொல்லப்பட்டிருக்க, மீண்டும் அந்த ரக்ஷகத்வத்தையே தெரிவிக்குமதான இரண்டாவது பாதமிட்டிருப்பது விசேஷ ரக்ஷணமான மோக்ஷப்ரதாநத்தைப் பற்ற என்னுமிடம் ஸம்ப்ரதாயதத்வஜ்ஞர்களுக்கு விவரண நிரபேக்ஷம். விநத—வணங்கின, விவித—பலவகைப்பட்ட, பூதவ்ராத—பிராணிஸமூஹங்களை, ரக்ஷா—ரக்ஷிப்பதையே, ஏகதீக்ஷ—முக்கியமான விரதமாகக்கொண்டவனெம்பெருமான் என்பது சப்தார்த்தம். இங்கு பூதவ்ராத என்ற விடத்தில் ச்ருதப்ரகாசிகையில் பட்டரும், தத்வடீகையில் நிகமாந்தமஹாகுருவும் நிரூபித்தருளியுள்ள விசேஷார்த்தம் விசேஷித்து நோக்கத்தக்கது. பூதவ்ராத மென்பதற்கு ப்ராணிஸமூஹமென்று பொருளாஞலும் இதில் சிறிது உட்புகுந்து ஆராய்ந்தருளுகிறுர் ச்ருதப்ரகாசிகாபட்டர். ப்ராஹ்மண ஸமாஜ:, ராஜபரிஷத் என்னுமிரண்டு வ்யவஹாரங்களையெடுத்துக்காட்டி, இவற்றிலுள்ள வாசியையுங்காட்டி விசேஷார்த்த நிஷ்கர்ஷம் செய்தருளுகிறுர். ப்ராஹ்மண ஸமாஜமென்று சொன்னுல் அந்த ஸமாஜத்தில் பிராமணர்கள் மட்டுமே கூடியிருப்பதாகவும் இதர ஜாதியர்களின் சேர்க்கை அங்கு இல்லையாகவும் உலகத்தில் ஸ்பஷ்டமாகக் காண்கிறது. ராஜபரிஷத்தென்று சொன்னுல் இப்படி காணப்படுவதில்லை. கேவலம் ராஜாக்கள் மட்டுமே கூடுகிற கூட்டத்தையா ராஜபரிஷத்தென்கிறேம். இல்லை; மந்த்ரிகளும் ப்ரஜைகளுமாகிய இதரர்களும் அரசனேடு கூடியிருக்குமிருப்பையே 'ராஜபரிஷத்' தென்கிறேம். 'ப்ராஹ்மண ஸமாஜ:' என்ற விடத்திலும் ராஜபரிஷத் என்ற விடத்திலும் அவிசேஷேண ஷஷ்டீதத்புருஷ ஸமாஸமே கொள்ளுகிறேம். ஸமாஸத்தில் வாசியில்லையாயினும் பொருளில் நெடுவாசியுள்ளது.

ச்ருதப்ரகாசிகாபட்டர் இவற்றையெடுத்துக்காட்டி விரிவாக அருளிச்செய்துள்ளார். விநதப்ராணிகளுக்குமட்டும் மோக்ஷமளிக்கையன்றிக்கே அந்தப்ராணிகளோடு ஸம்பந்தம் பெற்றவர்களுக்குங்கூட அந்த விநதப்ராணிகளின் விநதியே காரணமாக மோக்ஷமளிக்கிறுனெம்பெருமானென்றருளியுள்ளார். இங்கு "தத ஏவ காரணுத்" என்கிற ஸ்ரீஸூக்தி ஜீவநாடியாகவுள்ளது.

இவ்வர்த்தத்தை வேதாந்த வாசிரியர் தத்வடீகையில் வெகு அழகாக உபபாதித்துப் பொருந்தவைக்கிறுர். அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் நன்கு காணத்தக்கன. மூலத்தில் ரக்ஷாபதத்தாலே விவக்ஷிதமான ரக்ஷணம் "அஸாதாரணஸ்ய பரமப்ரயோஜநஸ்ய மோக்ஷஸ்யைவ ப்ரதாநம்" என்று நிர்ணீதமாயிருக்கையாலே இந்த மோக்ஷப்ரதாநம் விநதபூதங்களுக்குமட்டுமன்று, தத்ஸம்பந்தி ஸம்பந்திகளுக்கும் அப்ரதிஹதம் என்கிற அர்த்தமே தத்வடீகாஸூக்திகளாலும் விசதீக்ருதமாயிற்று. சரணுகதிகத்யத்தில் *பகவந்நாராயணபிமதாநுரூபேத்யாதி சூர்ணையிஞல் புருஷகாரப்ரபத்தி செய்தருளின எம்பெருமானர்க்கு ப்ரதிவசநமிட்டருளின ஸ்ரீரங்கநாச்சியார் "அஸ்து தே" என்ற

